# (44) - இஸ்லாம்

## வினாத்தாள் கட்டமைப்பு

**வினாத்தாள் I** - **நேரம்: இரண்டு மணித்தியாலங்கள்.**
ஐந்து தெரிவுகளைக் கொண்ட 50 பல்தேர்வு வினாக்களைக் கொண்ட **எல்லா** வினாக்களுக்கும் விடையளித்தல் வேண்டும். ஒரு வினாவுக்கு 01 புள்ளிகள் வீதம் மொத்தப் புள்ளிகள் 50 ஆகும்.

**வினாத்தாள் II** - **நேரம்: மூன்று மணித்தியாலங்கள்.** (மேலதிக வாசிப்பு நேரம் 10 நிமிடங்கள்)
இவ்வினாத்தாள் பகுதி I, பகுதி II, என இரண்டு பகுதிகளைக் கொண்டது.
பகுதி I - இப்பகுதி **பகுதிக் கட்டமைப்பு வினாக்கள் மூன்றைக்** கொண்டது. அவற்றுள் எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கு விடையளித்தல் வேண்டும். ஒரு வினாவுக்கு 20 புள்ளிகள் வீதம் 40
புள்ளிகள்

பகுதி II -இப்பகுதி **கட்டுரை** வகை வினாக்கள் **ஐந்தைக்** கொண்டது. அவற்றுள் எவையேனும் **மூன்று** வினாக்களுக்கு விடையளித்தல் வேண்டும். ஒவ்வொரு வினாவுக்கும் 20 புள்ளிகள் வீதம் இப்பகுதிக்குரிய மொத்தப் புள்ளிகள் 60 ஆகும்.
வினாத்தாள் II இற்கு மொத்தப் புள்ளிகள் 100

இறுதிப்புள்ளியைக் கணித்தல்: வினாத்தாள் I = 50
வினாத்தாள் II = 100 ÷ 2 = 50

## வினாத்தாள் - I

**அறிவுறுத்தல்கள்:**

* **எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.**
* **சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிந்தெடுக்க. (பரீட்சையில் விடை எழுதுவதற்கு பல்தெரிவுத் தாள் வழங்கப்படும்.)**

---

**1.** பின்வருவோரில் ஆன்மீகத்துறையில் பிரபல்யம் பெற்றவராக அடையாளப்படுத்தப்படுபவர் யார்?

(1) இப்ராஹீம் இப்னு அத்ஹம் (றஹ்).
(2) முஹம்மத் இப்னு இஸ்மாஈல் (றஹ்).
(3) நு.்.மான் பின் ஸாபித் (றஹ்).
(4) உமர் பின் அப்துல் அஸீஸ் (றஹ்).
(5) உஸ்மான் இப்னு மல்ஊன் (ரழி).

**2.** இஸ்லாத்தை ஏற்ற ஜாஹிலிய்ய மக்களை மீண்டும் குப்ரின் பக்கம் செல்லாமல் தடுத்த பண்பு எது?

(1) வீரம்
(2) எளிமை
(3) விருந்தினரை உபசரித்தல்
(4) வாக்குமீறாமை
(5) வெட்கம்

**3.** இஸ்லாம் அனுமதித்த வியாபார முறைகளில் விவசாயப் பங்குடமையைக் குறிப்பது யாது?

(1) முஷாரகா (2) முஸாரஆ (3) முழாரபா (4) முராபஹா (5) பைஉல் முஅஜ்ஜல்

**4.** தாவூத் (அலை), ஸகரிய்யா (அலை) ஆகியோர் மேற்கொண்ட தொழில் முயற்சிகள் முறையே யாவை?

(1) இரும்புருக்கு, விவசாயம்
(2) கப்பல் கட்டுதல், விவசாயம்
(3) இரும்புருக்கு, தச்சுத் தொழில்
(4) வணிக முயற்சி, தச்சுத் தொழில்
(5) விவசாயம், மந்தை வளர்ப்பு

**5.** செல்வத்தைத் தேவைக்கேற்ப செலவிடுவது, பகிர்ந்தளிப்பது தொடர்பாக உமர் இப்னு அப்துல் அஸீஸ் (றஹ்) அவர்களின் கூற்று

(1) நீங்கள் ஓர் ஏழைக்கு வழங்கினால் பிறரிடம் தேவைப்படாத அளவுக்கு வழங்குங்கள்.

(2) என்னால் நிறைவேற்ற முடியாமல் போன கடமைகளை நிறைவேற்ற எனக்கு சந்தர்ப்பம் கிடைத்தால் செல்வந்தரிடம் பெற்று ஏழைகளுக்குப் பகிர்ந்தளிப்பேன்.

(3) ஏழைகளைப் பராமரிக்கப் போதுமான அல்லாஹ் செல்வத்தை பணக்காரரிடம் வைத்திருக்கிறான்.

(4) ஏழைகள், அநாதைகள், கடன்பட்டோர், திருமணம் செய்யக் கருதும் வசதியற்றோர் என்னிடம் உதவி பெற்றுக்கொள்ளலாம்.

(5) அவர்களின் செல்வங்களில் யாசிப்போருக்கும் இல்லாதோருக்கும் உரிமையுண்டு.

**6.** "ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்கு இரு தடவை கடன் வழங்கினால் அதில் ஒரு தடவை அவர் ஸதகா செய்தவரைப் போலாவார்" என்பது,

(1) நபியவர்களின் கூற்று
(2)அல்குர்ஆனின் கூற்று
(3) ஆட்சியாளர் ஒருவரின் கூற்று
(4) இமாம் ஒருவரின் கூற்று
(5) ஸஹாபி ஒருவரின் கூற்று

**7.** ஒருவரது தௌபா ஏற்றுக்கொள்ளப்படுவதற்குரிய நிபந்தனைகளுள் ஒன்று

(1) செய்த பாவத்திற்காக அறபு மொழியில் பாவமன்னிப்புக் கோரல்.

(2) பாவமன்னிப்புக் கோரி கண்ணீர் சிந்துதல்.

(3) லைலதுல் கத்ர் இரவில் குறித்த பாவத்திற்காக மன்னிப்புத் தேடல்.

(4) பாவத்திற்குப் பிரதியீடாக அதிகம் தர்மம் செய்தல்.

(5) குறித்த பாவத்தை இனிமேல் செய்வதில்லை என உறுதி கொள்ளல்.

**8.** "பிஸ்மிகல்லாஹும்ம" என்ற ஆரம்பத்தொடர் எக்கால மரபைச் சார்ந்தது

(1) ஜாஹிலிய்யாக் கால மரபு
(2) நபியவர்கள் கால மரபு
(3) குலபாக்கள் கால மரபு
(4) உமையாக் கால மரபு
(5) நவீன கால மரபு

**9.** பின்வருவோருள் இஸ்லாத்திற்கு முற்பட்ட காலத்தில் ஜாஹிலிய்யத்திலிருந்து நீங்கி சத்தியத்தைச் சார்ந்து வாழ்ந்தவர் யார்

(1) குஸ் இப்னு ஸாஇதா
(2) அபூ குஹாபா
(3) ஸைத் இப்னு ஹாரிதா
(4) உஸ்மான் இப்னு அப்வான்
(5) உமர் இப்னு கத்தாப்

**10.** முஹம்மத் (ஸல்) அவர்களுக்குப் பின்னர் மற்றொரு நபி தோன்றுவதற்கு அவசியம் ஏதும் இல்லை என்பதற்கான பிரதான காரணம் யாது.

(1) இஸ்லாத்தின் போதனைகள் அறபு மொழியில் அமைந்துள்ளமை.

(2) முஹம்மத் (ஸல்) அவர்களின் வாழ்வு பற்றிய நூல்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றமை.

(3) ஹதீஸ்கள் திறனாய்வு செய்யப்பட்டு வகைப்படுத்தப்பட்டுள்ளமை.

(4) நபி (ஸல்) அவர்களது உம்மத் அவரைப் பின்பற்றிவருகின்றமை.

(5) அல்குர்ஆனின் பாதுகாப்பு அல்லாஹ்வால் உத்தரவாதப்படுத்தப்பட்டுள்ளமை.

**11.** இஸ்லாத்தின் அடிப்படையில் ஆடை அணிவதன் நோக்கங்கள் யாவை?

(1) உடலையும் மானத்தையும் மறைத்து, தோற்றத்தை அழகாக வைத்திருத்தல்.

(2) தோற்றத்தை அழகாகவும் தூய்மையாகவும் வைத்திருத்தல்.

(3) உடலை அழகாக மறைத்து, வெளித் தோற்றத்தை நாகரிகமாக வைத்திருத்தல்.

(4) கலாசாரத்தைப் பேணுவதோடு தனித்துவத்தையும் பாதுகாத்தல்.

(5) தோற்றத்தை நேர்த்தியாகவும் உடலை தூய்மையாகவும் வைத்திருத்தல்.

**12.** "மனிதன், மனிதனுக்கு வழிபடு வதிலிருந்து விடுவித்து, அல்லாஹ்வுக்கு மாத்திரம் வழிபடடும் நிலைக்குக் கொண்டுவருவதற்காகவே அல்லாஹ் எங்களை அனுப்பி வைத்தான்" என்று பாரசீகத் தளபதி ருஸ்துமிடம் விளக்கியவர்

(1) உமர் இப்னு கத்தாப் (ரழி)
(2) காலித் இப்னு வலீத் (ரழி)
(3) ருப்ஆ இப்னு ஆமிர் (ரழி)
(4) ஸஅத் இப்னு அபீவக்காஸ் (ரழி)
(5) அம்ர் இப்னு ஆஸ் (ரழி)

**13.** பின்வருவனவற்றுள் இஸ்லாமியப் பொருளாதாரக் கோட்பாட்டைச் சாராத அம்சத்தை அடையாளப்படுத்துக.

(1) வளங்கள் அனைத்தும் அல்லாஹ்வுக்குரியன.
(2) தனியார் சொத்தில் சமூகத்துக்கும் பங்குண்டு.
(3) செலவு செய்வதில், சேமிப்பதில் நடுநிலை பேணல்.
(4) செல்வம் மனிதனை சோதிப்பதற்காகத் தரப்பட்டதாகும்.
(5) செல்வம் மனித முயற்சியினாலேயே பெறப்படுவதாகும்.

**14.** இஸ்லாமிய வாரிசுரிமைச் சட்டத்தில் "ஹஜ்புன் நுக்ஸான்" என்பது,

(1) குறிப்பிட்ட ஒருவர் இருப்பதனால் வேறு சிலருக்குச் சொத்தின் பங்கு முற்றாகவே கிடைக்காமை.
(2) குறிப்பிட்ட ஒருவர் இருப்பதனால் சிலருக்குச் சொத்தில் பங்கு குறைவாகக் கிடைக்கின்றமை.
(3) மரணித்தவரின் வாரிசு வயதில் குறைந்த நிலையில் உள்ளமை
(4) வாரிசுகளின் மீது பொறுப்புக்கள் சுமத்தப்பட்டுள்ளமை.
(5) சொத்துக்குரியவரை வாரிசு கொலை செய்த நிலைமை.

**15.** மதீனாவிலிருந்தும் அதற்கு வடக்கே இருந்தும் வருபவர்களுக்கான இஹ்ராம் கட்ட வேண்டிய "மீகாத்"

(1) அல் ஜுஹ்பா
(2) யலம்லம்
(3) கர்னுல் மனாஸில்
(4) துல் ஹுலைபா
(5) தாத்துல் இராக்.

**16.** கலீபா உஸ்மான் (ரழி) மற்றும் அலி (ரழி) அவர்களின் காலத்தில் அமைதியின்மை நிலவக் காரணமாக அமைந்தவர யார்?

(1) அப்துல்லா பின் உபை
(2) அப்துல்லா பின் ஸபா
(3) அபூ லுஃலுஉ பைரூஸ்
(4) உபை இப்னு ஸுலூல்
(5) அம்ர் இப்னு லுஹை

**17.** பின்வருவனவரும் விடயங்களைக் கவனத்திற் கொள்க

A இஸ்லாத்தின் அடிப்படை மூலாதாரங்கள் வஹியின் அடிப்படையில் பெறப்பட்டவையாகும்.
B முஹம்மத் (ஸல்) அவர்களது போதனை அறபு மொழி பேசுபவர்களுக்கு மட்டும் உரியதாகும்.
C மனிதன் அல்லாஹ்வின் பிரதிநிதியாவான்.
D இஸ்லாம் இவ்வுலகத்தைத் துறந்து வாழ பணிக்கின்றது.
E இஸ்லாம் சமூகத்தை விட தனிமனிதனுக்கே முக்கியத்துவம் வழங்குகிறது.
F இஸ்லாம் எல்லாக் காலத்திற்கும் எல்லாப் பிரதேசத்திற்குமுரியதாகும்.

மேலுள்ளவற்றில் இஸ்லாத்தின் சிறப்பம்சங்களைக் உள்ளடக்கிய தொகுதி

(1) A, B, C (2) A, C, D (3) A, C, F (4) B, E, F (5) D, E, F

- **18** தொடக்கம் **23** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் **X, Y** என்னும் நிரல்களின் கீழ் தரப்பட்டுள்ள தகவல்கள் ஏதேனும் ஒரு வகையில் ஒன்றுடன் ஒன்று தொடர்புபட்டவை. அதன்படி **Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுடன் தொடர்புபடுத்தும்போது பொருத்தமாக அமையும் சேர்மானத்தைத் தெரிவு செய்க.

**18.**

| நிரல் **X** | நிரல் **Y** |
|---|---|
| (i) மக்பூல் | A - இஸ்னாத்தில் ஸஹாபி விடுபட்ட ஹதீஸ் |
| (ii) மங்கூப் | B - இட்டுத்தட்டப்பட்ட ஹதீஸ் |
| (iii) முர்ஸல் | C - ஏற்றுக்கொள்ளத்தக்க ஹதீஸ் |
| (iv) மல்லூஉ | D- ஸஹாபியுடன் இஸ்னாத் நிறைவுறும் ஹதீஸ் |

(1) A B D C (2) B A D C (3) C D A B (4) D A B C (5) D A C B

**19.** நிரல் **X** — நிரல் **Y**

(i) றப்பானிய்யா — A - யதார்த்தமானது.

(ii) இன்ஸானிய்யா — B - தெய்வீகத் தன்மையானது.

(iii) வாகிஇய்யா — C - முழுமைத்தன்மையுடையது.

(iv) ஷுமூலிய்யா — D - மனிதாபிமானது.

(1) A B D C (2) B A C D (3) B D A C (4) B D C A (5) C A D B

**20.** நிரல் **X** — நிரல் **Y**

(i) கிலாபத் — A - பொறுப்புச் சாட்டுதல்

(ii) ரிஸாலத் — B - இடம்பெயர்தல்

(iii) ஹிதாயத் — C - இறைத்தூது

(iv) ஹிஜ்ரத் — D - நேர்வழி

(v) வகாலத் — E - பிரதிநிதித்துவ ஆட்சி

(1) A C E B D (2) B E C D A (3) D B C E A (4) D B C A E (5) E C D B A

**21.** நிரல் **X** — நிரல் **Y**

(i) இமாம் நு.்.மான் பின் ஸாபித் (றஹ்) — A - ஸஹீஹ் புகாரி

(ii) இமாம் முஹம்மத் இப்னு இத்ரீஸ் (றஹ்) — B - முவத்தா

(iii) இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் (றஹ்) — C - ரிஸாலதுல் உஸூலிய்யா

(iv) முஹம்மத் இப்னு இஸ்மாஈல் (றஹ்) — D - முஸ்னத் அஹ்மத்

(v) அனஸ் இப்னு மாலிக் (றஹ்) — E - பிக்ஹுல் அக்பர்

(1) A D E B C (2) B C D A E (3) C D B A E (4) D C B C A (5) E C D A B

**22.** நிரல் **X** — நிரல் **Y**

(i) ஸம்ஸரா — A - முற்பணக் கொடுப்பனவு

(ii) றஹ்ன் — B - கூட்டுப் பங்காண்மை

(iii) இஜாரா — C - அடகுவைத்தல்

(iv) முழாரபா — D - வாடகை

(v) ஸலம் — E - தரகுத் தொழில்

(1) A D E B C (2) B C D A E (3) C D B A E (4) E C D B A (5) E D B C A

**23.** "தாருன் நத்வா" என்ற சபையை உருவாக்கியவர்

(1) அப்துல் முத்தலிப் (2) குஸை இப்னு கிலாப் (3) அப்துஷ் ஷம்ஸ்

(4) அபூ சுப்யான் பின் ஹர்ப் (5) ஹம்ஸா பின் அப்துல் முத்தலிப்

**24.** "இப்னு ஸபீல்" என்ற பிரிவினருக்கு ஸகாத் வழங்கப்படுவதற்கான காரணம் யாதெனில் அவர்கள்

(1) அல்லாஹ்வின் பாதையில் உழைப்பவர்கள்.

(2) தாம் பெற்ற கடனை அடைக்க வசதியற்றவர்கள்.

(3) அடிமைத் தனத்திலிருந்து மீட்கப்பட வேண்டியவர்கள்.

(4) ஆகுமான பிரயாணத்தை சிரமமின்றி முடித்துக் கொள்ள வேண்டியவர்கள்.

(5) ஸகாத்தினை வசூல் செய்து உரியவர்களுக்கு பகிர்ந்தளிக்கின்றவர்கள்.

**25.** ஹதீஸில் "ஸனத்" பற்றி ஆராய்கின்ற கலை

(1) உஸூலுல் ஹதீஸ் (2) தஹ்ரீஜுல் ஹதீஸ் (3) அஸ்மாஉர் ரிஜால்

(4) முஸ்தலஹுல் ஹதீஸ் (5) இல்முல் ஹதீஸ்

**26.** பொது நலன் பேணுவதற்கு வழிவகுக்கக் கூடிய இஸ்லாமியக் கடமை

(1) தொழுகை (2) நோன்பு (3) ஸகாத் (4) உம்ரா (5) ஹஜ்

**27.** பெற்றோர் மரணித்த பின்னர் அவர்களுக்கு பிள்ளைகள் செய்ய வேண்டிய கடமைகளுள் பிரதானமானது
(1) அவரது கப்ரை ஸியாரத் செய்தல்.
(2) அவர் பெயரில் அன்னதானம் வழங்குதல்.
(3) அவரை அடிக்கடி நினைவு கூர்ந்து புகழ்தல்.
(4) அவரின் வஸிய்யத்களை நிறைவேற்றல்.
(5) அவரது சொத்துக்களை முறையாகப் பகிர்ந்து கொள்ளல்.

**28.** ஹஜ்ஜின் வாஜிப்களில் ஒன்று விடுபட்டதற்காக பித்யாவாக ஓர் ஆட்டைக் குர்பான் கொடுக்க முடியாத ஒருவர்
(1) ஹரமிலுள்ள மூன்று மிஸ்கீன்களுக்கு உணவளிக்க வேண்டும்.
(2) மக்காவில் மூன்று நோன்புகள் பிடிக்க வேண்டும்.
(3) மதீனாவில் 07 நோன்புகள் பிடிக்க வேண்டும்.
(4) மக்காவில் 02 நோன்புகளும் மதீனாவில் 07 நோன்புகளும் பிடிக்க வேண்டும்.
(5) மக்காவில் 03 நோன்புகளும் ஊர் திரும்பியதும் 07 நோன்புகளும் பிடிக்க வேண்டும்.

**29.** இரு விடயங்களைத் தவிர வேறு எதற்காகவும் மனிதன் பொறாமைப்படக் கூடாது என ஹதீஸ் குறிப்பிடும் இரு விடயங்களும்
(1) அறிவைப் பெற்று அதன் மூலம் செயற்படுதல், இபாதத்தில் அதிக நேரம் செலவளித்தல்.
(2) மக்களுக்காக உடலால் உழைத்தல், அல்லாஹ்வின் பாதையில் செலவளித்தல்.
(3) ஸதகா செய்தல், பொது நலப் பணிகளில் ஈடுபடல்.
(4) அதிகமாக நோன்பு நோற்றல், இரா வணக்கங்களில் ஈடுபடல்.
(5) அறிவைப் பெற்று அதன் மூலம் செயற்படல், செல்வம் கிடைத்து அதனை அல்லாஹ்வின் பாதையில் செலவிடல்.

**30.** கீழே தரப்பட்டுள்ள கூற்றுக்களைக் கருத்திற் கொள்க.
A. தஸவ்வுப் என்பது துறவறக் கோட்பாடாகும்.
B. மங்கோலியர் இஸ்லாத்தைத் தழுவ சூபிமகான்கள் காரணமாக அமைந்தனர்.
C. தஸவ்வுப் என்ற வழிமுறை நபியவர்கள் காலத்தில் இருந்தே காணப்பட்டது.
D. இஸ்லாமிய உலகில் ஷாதுலியா, சஹ்ரவர்தியா, நக்ஷபந்திய்யா போன்ற தரீக்காக்கள் தஸவ்வுப் சிந்தனையை முன்வைத்தன.
E. முஸ்லிம் உம்மத்தை மேற்கத்தேய சிந்தனைகளில் இருந்து பாதுகாக்க தரீக்காக்கள் பங்காற்றியுள்ளன.

மேலுள்ளவற்றுள் தஸவ்வுப் தொடர்பான கூற்றுக்களை மாத்திரம் உள்ளடக்கிய தொகுதி
(1) A, B, C (2) B, D, E (3) B, C, D (4) B, C, E (5) C, D, E

**31.** கலீபாவாகவும் முஜத்திதாகவும் கருதப்படுவர்.
(1) உமர் இப்னு அப்துல் அஸீஸ் (றஹ்)
(2) உமர் இப்னு கத்தாப் (ரலி)
(3) முஹம்மத் அல் பாதிஹ் (றஹ்)
(4) சுல்தான் ஸலாஹுத்தீன் (றஹ்)
(5) சுல்தான் அப்துல் ஹமீத் (றஹ்)

**32.** பின்வரும் கூற்றுக்களை கவனமாக வாசிக்குக.
A- அல்லாஹ்வினதும் அவனது தூதரினதும் வழிகாட்டலுக்கு ஏற்ப கட்டியெழுப்பப்பட்டதாகும்.
B- இஸ்லாமிய சமூக அமைப்பு ஏனைய சமூகங்களுடனான உறவை அங்கீகரித்துள்ளது.
C- இஸ்லாமிய சமூக அமைப்பின் அடிப்படைகளுள் தஸவ்வுப் முக்கிய இடத்தை வகிக்கின்றது.
D- இஸ்லத்தின் போதனைகள் தனிநபர்களை மட்டும் நோக்கியதாக இல்லாமல் சமூகத்தையும் நோக்கியதாக காணப்படுகின்றன
E- இஸ்லாமிய சமூக அமைப்பு நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றது.

மேலுள்ளவற்றுள் இஸ்லாமிய சமூக அமைப்பு பற்றிய சரியான கூற்றுக்களை உள்ளடக்கிய தொகுதி
(1) A, B, C (2) A, B, D (3) A, C, E (4) B, C, D (5) B, D, E

**33.** மனித உரிமைகள் பற்றிய சில கூற்றுக்கள் பின்வருமாறு

A. 1948 இல் ஐக்கிய நாடுகள் சபை வெளியிட்ட மனித உரிமைப் பிரகடனம் மதீனா சாசனத்தை ஒத்ததாக உள்ளது.

B. இஸ்லாம் வழங்கிய உரிமைகள் அனைத்தும் நபியவர்களினாலேயே வகுக்கப்பட்வையாகும்.

C. மனித உரிமைகளில் அநீதிக்கு எதிராகப் போராடும் உரிமை தடைசெய்யப்பட்டுள்ளது.

D. மனிதனது கௌரவம் பாதுகாக்கப்பட்ட வேண்டும்.

E. மனிதனது அடிப்படை வாழ்க்கைத் தரம் பேணப்பட வேண்டும்.

இவற்றுள் இஸ்லாம் வழங்கும் மனித உரிமைகள் தொடர்பான கருத்துக்களைப் பிரதிபலிக்ககூடிய கூற்றுக்களின் சரியான சேர்மானத் தொகுதி

(1) A, B, E (2) A, D, E (3) B, D, E (4) C, B, E (5) C, D, E

**34.** இஜ்திஹாதின் அடிப்படையில் தோற்றம் பெற்ற சட்ட மூலாதாரங்கள் யாவை?

(1) அல் ஹதீஸ், அல் இஜ்மாஉ
(2) அல் ஹதீஸ், அல் கியாஸ்
(3) அல் இஜ்மாஉ, உர்பு
(4) அல் இஸ்திஹ்ஸான், ஷரா∴ ஸாபிகா
(5) மேலுள்ள அனைத்தும்

**35.** சட்டத் தீர்வுகளையும் விதிகளையும் பெறுவதில் குறித்த ஓர் இமாமின் விதிமுறையைப் பின்பற்றுபவர்

(1) முஜ்தஹித் பில் பத்வா
(2) முஜ்தஹித் பில் மத்ஹப்
(3) முஜ்தஹித் முன்தஸிப்
(4) முஜ்தஹித் முத்லக்
(5) முஜ்தஹித் பில் மஸாகில்

**36.** ஆஹாதான வகையைச் சார்ந்த ஹதீஸ்களுள், இஸ்னாதில் ஏற்படும் முறிவுகளின் அடிப்படையில் அமைந்த இரு வகை ஹதீஸ்கள் யாவை?ள

(1) முர்ஸல், மர்பூ∴ (2) மஷ்ஹூர், மக்தூ∴
(3) முஅல்லக், மவ்கூப் (4) முன்கதி∴, முஅல்லக்
(5) அல்மஷ்ஹூர் அல்அஸீஸ்

**37.** இஜ்மாஉ ஸுகூதி பற்றிய சரியான கூற்று

(1) முஜ்தஹித்கள் அனைவரும் ஏகோபித்து கருத்தொற்றுமைப் பட்டிருத்தல்.
(2) முஜ்தஹித்கள் அனைவரும் தங்களது கருத்தை தெளிவாக வெளிப்படுத்தியிருத்தல்
(3) முஜ்தஹித்கள் சிலர் கருத்துத் தெரிவிக்க மற்றும் சிலர் அக்கருத்தை ஏற்று மௌனம் சாதித்தல்
(4) குறித்த விடயத்தில் முஜ்தஹித்கள் ஒரு கருத்தை முன்வைக்க மற்றும் சிலர் அது தொடர்பாக வேறொரு நிலைப்பாட்டைக் கொண்டிருத்தல்
(5) 3உம், 4ம் சரியானவை

**38.** ஒரு வருடம் முழுவதும் 400 ஆடுகளை வைத்திருக்கும் ஒருவர் கொடுக்க வேண்டிய ஸகாத்தின் அளவு

(1) இரு ஆடுகள்
(2) மூன்று ஆடுகள்
(3) நான்கு ஆடுகள்
(4) ஐந்து ஆடுகள்
(5) ஒரு மாடு

- **39** தொடக்கம் **44** வரையிலான வினாக்களில் இரண்டு வகையான கூற்றுக்கள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் தரப்பட்டுள்ள சோடிக்கூற்றுகளுக்கு பின்வரும் **(1), (2), (3), (4), (5)** என்பவற்றில் மிகப் பொருத்தமானதை தெரிவு செய்து அதன் இலக்கத்தைக் குறிக்க.

| இலக்கம் | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| (1) | சரியானது | சரியானது |
| (2) | பிழையானது | சரியானது |
| (3) | சரியானது | பிழையானது |
| (4) | பிழையானது | பிழையானது |
| (5) | சரியானது | முதலாம் கூற்றை மேலும் விளக்குகிறது |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **39.** | 'இல்ஹாத்' கோட்பாடு ஆரம்பத்தில் ஹனீப்களால் தோற்றுவிக்கப்பட்டதாகும். | அப்துல்லாஹ் இப்னு உபை முல்ஹித்களில் ஒருவனாவான். |
| **40.** | கவாரிஜ்கள் ஸிப்பீன் போரின் போது தோற்றம் பெற்றனர். | அலி (ரலி) அவர்களே முதல் கலீ-பாவாகவும் இமாமாகவும் இருக்க வேண்டும் என்ற நிலைப்பாட்டில் தோன்றியவர்கள் ஷீஆக்களாவர். |
| **41.** | மக்கி, மதனி வசனங்கள் கருத்திலும் மொழியமைப்பிலும் ஒரே தன்மையைக் கொண்டவை | அல்குர்ஆனில் நாஸிஹ் - மன்ஸூஹ் என்ற வகையில் சில வசனங்கள் காணப்படுகின்றன. |
| **42.** | முஜ்தஹித் முத்லக் எனப்படுபவர் இஜ்திஹாத் காண்பதற்கு முதற்தரத் தகுதியுடையோராவர் | கியாஸும், ஸஹாபாக்களின் இஜ்மாவும் சமதரத்தில் நோக்கப்படுகின்றன. |
| **43.** | கணவன் மரணித்த பெண் மிக வயோதிப நிலையை அடைந்திருந்தால் 4 மாதம் 10 நாட்கள் இத்தா அனுஷ்டிக்க அவசியமில்லை | தலாக் சொல்லப்பட்ட பெண் 3 குருஉகள் கட்டாயம் இத்தா அனுஷ்டிக்க வேண்டும். |

**44.** இஸ்லாமிய வரலாற்றில் தோன்றிய அகீதா சார் பிரிவுகளில் கவாரிஜ்கள், மு∴தஸிலாக்கள் குறித்து பின்வரும் கூற்றுக்களில் மிகவும் பொருத்தமானது யாது

(1) முதலாவது பிரிவினர் அலி (ரழி) அவர்களே கலீபாவாக வரவேண்டும் என்றும் இரண்டாவது பிரிவினர் மறைந்த இமாம் முஹம்மத் அஸ்கர் மீண்டு வருவார் என்றும் கருதுகின்றனர்.

(2) முதலாவது பிரிவினர் ஷபாஅத்தை உண்டு என்றும் இரண்டாவது பிரிவினர் அல்குர்ஆன் படைக்கப்பட்டது என்றும் கருதுகின்றனர்.

(3) முதலாவது பிரிவினர் அதிகமான ஸஹாபாக்களை காபிர்கள் என்றும் இரண்டாம் பிரிவினர் மறுமையில் அல்லாஹ்வைக் காண முடியும் என்றும் கருதுகின்றனர்.

(4) முதலாவது பிரிவினர் பெரும்பாவம் செய்தோர் காபிர் என்றும் இரண்டாவது பிரிவினர் அகீதாவைப் பகுத்தறிவு ரீதியாக நோக்க வேண்டும் என்றும் கருதுகின்றனர்.

(5) முதலாம் பிரிவினர் அலி (ரழி), உஸ்மான் (ரழி) போன்ற ஸஹாபாக்கள் நீதியானவர்கள் என்றும் இரண்டாம் பிரிவினர் பெரும்பாவம் செய்தோர் மு∴மினுமில்லை காபிருமில்லை என்றும் கருதுகின்றனர்.

**45.** பிக்ஹ் துறை வரலாற்றில் இஜ்திஹாதின் வாயில்கள் மூடப்பட்டதனால் ஏற்பட்ட விளைவுகளில் ஒன்று

(1) முஜ்தஹித் முத்லக்குகள் தொடர்ந்து தோன்றியமை.
(2) தக்லீத் சிந்தனைகளில் இருந்து சமூகம் விடுபட்டமை.
(3) மத்ஹப் சிந்தனைகள் நூலுருப்பெற்றமை.
(4) மத்ஹப் சிந்தனையில் இருந்து வெளியேறியமை.
(5) நவீன பிரச்சினைகளுக்குத் தீர்வுகள் வெளிவருகின்றமை.

**46.** இஸ்ஹாக் இப்னு ராஹவைஹி (றஹ்), அலி இப்னு மதீனி (றஹ்)ஆகிய ஆசிரியர்களிடம் கல்வி கற்ற ஹதீஸ்துறை அறிஞர்

(1) இமாம் புகாரி (றஹ்)
(2) இமாம் முஸ்லிம் (றஹ்)
(3) இமாம் அபூ தாவூத் (றஹ்)
(4) இமாம் இப்னு மாஜா∴ (றஹ்)
(5) இமாம் திர்மிதி (றஹ்)

**47.** கலீபா அபூபக்கர் (ரழி) காலத்தில் அல்குர்ஆன் தொகுக்கப்பட்டதற்கான காரணங்களுள் மிகச் சரியானது

(1) அல்குர்ஆனை மனனமிட்டிருந்த பல ஹாபிழ்கள் மரணித்தமை.
(2) அல்குர்ஆனை ஓதுவதில் வித்தியாசங்கள் தோன்றியமை.
(3) அஹ்லுஸ் ஸுன்னா, ஷீயா பிரிவுகள் தோற்றம் பெற்றமை.
(4) ஹுதைபதுல் யமானி (ரழி) அவர்கள் ஆலோசனை வழங்கியமை.
(5) நபி (ஸல்) அவர்கள் மரணித்தமை.

**48 .** குற்றமும் தண்டனையும் தொடர்பான பின்வரும் கூற்றுக்களுள் பிழையானது.

(1) அல்லாஹ்வும் ரஸூலும் விதித்த ஒன்றை விடுவதும் தடுத்த ஒன்றை செய்வதும் குற்றமாகும்.
(2) "அல்லாஹுதூத" என்பது தண்டனைகள் வரையறுக்கப்பட்ட குற்றங்களைக் குறிக்கும்.
(3) ஹுதூத் குற்றங்களின்போது தண்டனைகள் குற்றவாளியை பொறுத்து மாறுபடக்கூடியது.
(4) நிர்ணயிக்கப்படும் தண்டனையானது குற்றம் நிகழாது தடுக்கக் கூடியதாக இருத்தல் வேண்டும்.
(5) இஸ்லாமியத் தண்டனை முறைகள் தனிநபர்கள் மற்றும் சமூகத்தை மார்க்கத்தையும் அரசையும் பாதுகாப்பதையும் இலக்காகக் கொண்டுள்ளன.

**49.** பின்வருவனவற்றுள் "அர்கானுல் கியாஸை" சுட்டும் சரியான தொகுதி.

(1) அஸ்ல் - பர்உ - இல்லத் - ஹுகும்.
(2) அஸ்ல் - இல்லத் - ஸபப் - ஹுகும்.
(3) பர்உ - இல்லத் - உர்பு - ஸனத்.
(4) ஸனத் - ஹுக்ம் - இல்லத் - ஸபப்.
(5) அஸ்ல் - பர்உ, வாஜிப், இல்லத்.

**50.** பிக்ஹ் கலை பற்றிப் பின்வரும் கூற்றுக்களில் மிகச் சரியானது யாது.

(1) இமாம் மாலிக் (றஹ்) அவர்கள் தனது சட்டத்துறையில் கௌல் ஜதீத், கௌல் கதீம் ஆகிய பதங்களைப் பிரயோகித்துள்ளார்.
(2) இமாம் ஷாபிஈ (ரஹ்) அவர்களும் இமாம் அபூ ஹனீபா (ரஹ்) அவர்களும் சட்டவாக்கத்தில் ஒரே அணுகுமுறையைப் பயன்படுத்தியுள்ளார்கள்.
(3) இமாம் அபூ ஹனீபா (ரஹ்) அவர்கள் தனது சட்டவாக்கத்தில் அறிவுக்கும் ஆய்விற்கும் முக்கியமளித்துள்ளார்
(4) இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் (றஹ்) "மஜல்லதுல் அஹ்காம் அல் அத்லிய்யா" எனும் சட்ட நூலை உருவாக்கினார்.
(5) ஷாபி மத்ஹபை அடிப்படையாகக் கொண்டே பிக்ஹுல் அக்பர் எனும் சட்ட நூல் உருவாக்கப்பட்டுள்ளது.

* * *

# (44) - இஸ்லாம்

## வினாத்தாள் II

**அறிவுறுத்தல்கள் :**

* பகுதி I இலிருந்து **இரண்டு** வினாக்களையும் பகுதி II இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக

---

### பகுதி I

1. (i) தஸ்கியதுந் நப்ஸ் என்பதை வரைவிலக்கணப்படுத்துக. (02 புள்ளிகள்)

(ii) தஸ்கியதுந் நப்ஸின் முக்கியத்துவத்தை அல்குர்ஆன் வசனம் மற்றும் ஹதீஸ் என்பவற்றைக் குறிப்பிட்டு சுருக்கமாக விளக்குக. (04 புள்ளிகள்)

(iii) தஸ்கியதுந் நப்ஸை பேணுவதால் அன்றாட வாழ்வில் ஏற்படும் பயன்கள் நான்கை குறிப்பிட்டு அவற்றை விளக்குக. (06 புள்ளிகள்)

(iv) தஸ்கியதுந் நப்ஸை மேம்படுத்திக் கொள்வதற்கான வழிமுறைகள் நான்கை விளக்கி அவற்றில் இரண்டை உமது வாழ்வில் கடைப்பிடிப்பதற்கான வழிமுறைகளை விபரிக்குக. (08 புள்ளிகள்)

**2.** (i) முறாபஹா என்ற எண்ணக்கருவை வரைவிலக்கணப்படுத்துக. (02 புள்ளிகள்)

(ii) வியாபாரத்தில் தடுக்கப்பட்டுள்ள அம்சங்கள் நான்கைக் குறிப்பிட்டு அவற்றுள் இரண்டைச் சுருக்கமாக விளக்குக. (04 புள்ளிகள்)

(iii) பொருளீட்டலுக்கு இஸ்லாம் வழங்கியுள்ள முக்கியத்துவம் பற்றி அல்குர்ஆன், அல்ஹதீஸ் மற்றும் தர்க்க ரீதியாக மூன்று கருத்துக்களைக் குறிப்பிட்டு அவை ஒவ்வொன்றையும் விபரிக்குக. (06 புள்ளிகள்)

(iv) பொருளாதார ஏற்றத்தாழ்வைக் குறைப்பதற்கு இஸ்லாத்தின் தீர்வுகள் நான்கை முன்வைத்து அவற்றில் இரண்டை நடைமுறை வாழ்வோடு தொடர்புபடுத்தி விளக்குக. (08 புள்ளிகள்)

**3.** (i) மஹ்ரம், அஜ்னபி ஆகிய பதங்களை வரைவிலக்கணப்படுத்துக. (02 புள்ளிகள்)

(ii) திருமணத்தின் முக்கியத்துவம் பற்றி இஸ்லாத்தின் போதனைகள் நான்கைக் குறிப்பிட்டு அவற்றுள் இரண்டைச் சுருக்கமாக விளக்குக. (04 புள்ளிகள்)

(iii) கணவன், மனைவி ஆகிய இருவரினதும் கடமைகள் மூன்றைத் தனித்தனியே பட்டியற்படுத்தி அவை சீரான குடும்ப வாழ்வுக்கு எவ்வாறு பங்காற்றுகிறது என்பதை இஸ்லாமிய போதனைகளின் அடிப்படையில் நியாயப்படுத்துக. (06 புள்ளிகள்)

(iv) குடும்ப வாழ்வில் ஏற்படும் பிரச்சினைகளை தவிர்ப்பதற்கான இஸ்லாமிய வழிகாட்டல்கள் நான்கைக் குறிப்பிட்டு அவற்றை நடைமுறைவாழ்வில் பேண வேண்டும் என்பதற்கான உமது நியாயங்கள் நான்கை விளக்குக. (08 புள்ளிகள்)

### பகுதி II

**4.** (i) இன நல்லிணக்கத்தை ஏற்படுத்துவதற்கான இஸ்லாத்தின் முன்மாதிரிகள் ஐந்தைக் குறிப்பிட்டு அவற்றை இலங்கையில் அமுல்படுத்துவதற்கான வழிமுறையை உதாரணங்கூறி விளக்குக. (10 புள்ளிகள்)

(ii) சமய சமூக நல்லிணக்கத்தை நடைமுறைப்படுத்துவதில் மஸ்ஜித்களின் பங்கு பற்றி ஐந்து அம்சங்களைக் குறிப்பிட்டு அவற்றை வினைத்திறனாக நடைமுறைப்படுத்துவதற்கான பரிந்துரைகள் ஐந்தைக் குறிப்பிட்டு விளக்குக. (10 புள்ளிகள்)

**5.** (i) இஸ்லாமிய சட்டவாக்கத்தில் ஸுன்னாவின் முக்கியத்துவத்தினை ஐந்து அம்சங்களுக்கூடாக விளக்குக. (10 புள்ளிகள்)

(ii) பிக்ஹுத்துறையில் தோன்றும் கருத்து வேறுபாடுகளின்போது ஒரு முஸ்லிம் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள் ஐந்தைக் குறிப்பிட்டு அவற்றுக்கான உதாரணங்களை முன்வைத்து விபரிக்குக. (10 புள்ளிகள்)

**6.** (i) இஸ்லாத்தின் சிறப்பம்சங்கள் ஐந்தைக் குறிப்பிட்டு அவற்றினூடாக இஸ்லாம் ஒரு சம்பூரண வாழ்க்கைத் திட்டம் என்பதை நிறுவுக. (10 புள்ளிகள்)

(ii) இஸ்லாமிய அகீதாவில் தோன்றிய முரண்பட்ட சிந்தனைப் பிரிவுகள் ஐந்தைக் சுருக்கமாக விளக்கி அவை சமூகத்தில் ஏற்படுத்திய பாதக விளைவுகள் ஐந்தை விபரிக்க. (10 புள்ளிகள்)

**7.** (i) 'மகாஸிதுஷ் ஷரீஆ' என்றால் என்ன? அத்துறை தொடர்பான வரலாற்றை சுருக்கமாக விளக்குக. (10 புள்ளிகள்)

(ii) 'மகாஸிதுஷ் ஷரீஆ' வின் பாரம்பரிய வகைப்படுத்தல் மூன்றினையும் குறிப்பிட்டு அவற்றை விளக்குக. (10 புள்ளிகள்)

**8.** பின்வருவன பற்றி விளக்கக் குறிப்பு எழுதுக.

(i) பைத்துல் மால் (05 புள்ளிகள்)
(ii) முஜ்தஹித்களும் படித்தரங்களும் (05 புள்ளிகள்)
(iii) இலங்கையில் இஸ்லாத்தின் அறிமுகம் (05 புள்ளிகள்)
(iv) அத் த.்.மீன் (05 புள்ளிகள்)

* * *